# யதிபஞ்சகம்

(ஸந்நியாஸிகளின் மஹாபாக்யத்தை வியந்து ஐந்து சுலோகங்களால் விளக்குகிறது இந்தப் பிரகரணம்.)

**வேதா[3]ந்தவாக்யேஷு ஸதா[3] ரமந்தோ**
**பிக்ஷாந்தமாத்ரேண ச துஷ்டிமந்த: ।**
**விசோகமந்த: கரணே ஸ்மரந்த:**
**கௌபீநவந்த: க[2]லு பா[4]க்[3]யவந்த: ॥** 1

உபநிஷத்துக்களிலுள்ள வாக்யங்களில் எப்பொழுதும் ஆனந்தம் அடைபவர் களும், பிக்ஷையில் கிடைக்கும் ஆஹாரத்தினாலேயே ஸந்தோஷப்படுபவர்களும், சோகமற்ற (தாக உபநிஷத்தில் கூறப்பட்ட ஆத்ம) வஸ்துவையே உள்ளத்தில் நினைப்பவர்களுமான கௌபீனவான்கள் (துறவிகள்) அன்றோ பாக்யசாலிகள்?

**மூலம் தரோ: கேவலமாச்ரயந்த:**
**பாணித்[3]வயம் போ[4]க்துமமத்ரயந்த: ।**
**கந்தா[2]தமிவ ஶ்ரீமபி குத்ஸயந்த:**
**கௌபீநவந்த: க[2]லு பா[4]க்[3]யவந்த: ॥** 2

மரத்தினடியை மட்டும் இருப்பிடமாகக் கொண்டவர்களும், இரு கைகளையும் சாப்பிடுவதற்குப் பாத்திரமாகக் கொண்டவர்களும், கந்தையைப் போல செல்வத்தையும் வெறுக்கிறவர்களுமான கௌபீன தாரிகளன்றோ பாக்யசாலிகள்?

**தே[3]ஹாதிபா[4]வம் பரிமார்ஜயந்த:**
**ஆத்மாநமாத்மயவலோகயந்த: ।**
**நாந்தர் ந மத்[4]யம் ந ப[3]ஹி: ஸ்மரந்த:**
**கௌபீநவந்த: க[2]லு பா[4]க்ய[3]வந்த: ॥** 3

சரீரம் முதலியவைகளில் உணர்ச்சியை முழுதும் துடைத்து (போக்கி)க் கொண்டவர்களும், மனத்தில் ஆத்ம வஸ்துவைப் பார்க்கின்றவர்களும், உள்ளேயும், நடுவேயும், வெளியிலும் (வேறெதுவும்) நினைக்காதவர்களுமான கௌபீன தாரியரன்றோ பாக்யசாலிகள்?

**ஸ்வாநந்த[3]-பா[4]வே பரிதுஷ்டிமந்த:**
**ஸம்சாந்த ஸர்வேந்த்[3]ரிய த்[3]ருஷ்டிமந்த: ।**
**அஹர் நிசம் ப்[3]ரஹ்மணி யே ரமந்த:**
**கௌபீநவந்த: க[2]லு பா[4]க்[3]யவந்த: ॥** 4

எவர்கள் ஆத்மாவான தன தேயான ஆனந்த ஸ்வரூபத்தில் நன்னிறைவைப் பெற்றவராகவும், எல்லா இந்திரியங்களின் நுகர்ச்சியும் அடங்கியவர்களாகவும்,

இரவும் பகலும் ப்ரஹ்மத்திலேயே களிப்புறுகின்றவர்களுமாக (இருக்கின்றனரோ, அந்த) கௌபீன தாரியரேயன்றோ பாக்யசாலிகள்?

**பஞ்சாக்ஷரம் பா4வநமுச்சரந்த:**
**பதிம் பசூநாம் ஹ்ருதி3 பாவயந்த: |**
**பி4க்ஷாசநா தி3க்ஷு பரிப்4ரமந்த:**
**கௌபீநவந்த: க2லு பா4க்3யவந்த: ||** 5

பரிசுத்தியைக் கொடுக்கும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்துக்கொண்டும், மனத்தில் பசுபதியான பரமேசுவரனை தியானம் செய்துக்கொண்டும், பிக்ஷை எடுத்துக் கிடைக்கும் அன்னத்தை உண்பவர்களாய், திசைகள் எங்கும் சுற்றிக் கொண்டும் இருக்கிற கோவணாண்டிகளல்லவா பாக்யசாலிகள்?

